நெடுந்தவம் புரிந்து மெலிந்தனர் தளர்ந்துங்
காற்றுதிர் சருகுங் காயுங் கனியும்
வாய்த்தன வருந்தி வருந்தின ருலைந்தும்
பேயெனத் திரிந்தும் பேருடல் வரண்டுங்
கானிடை விலங்கெனக் காண்வர வுழன்றும்
வேற்றொரு தேவரை வேண்டார் நின்னடி
போற்றினர் முத்தி புகுவது பொருளாய்
அங்கவை யனைத்துஞ் சிந்தைசெய் யாது
தண்டலை மலர்விழும் வண்டின மென்னக்
கண்டன கண்டன காமுற்று வைகலும்
அறுசுவை யமுத மொருசுவை குறைந்துழி
அட்டனர் வெருவ வெட்டென வெகுண்டுந்
தண்ணறுஞ் சாந்து சவாது குங்குமம்
ஒண்மலர்ச் சூட்டென் றுள்ளன புனைந்தும்
நன்னெறி படர்கிலார் நட்பினை நயந்தும்
நாணிலாக் கணிகையர் நயனவேற் குடைந்தும்
வாணாளெல்லாம் வீணாக் கழித்தனன்
இனமணிக் குலங்க ளிமைக்குமா முடியுந்
தினகரர் போலொளி திகழ்முக மாறும்
ஒருமா வடிவா யுலகினை யுலைத்தசூர்
இருபிளவாக வெறிந்திமை யோர்கள்
சிறைதவிர்த் தருளிய திருநெடு வேலும்
மற்றுள படையும் வரதமு மபயமும்
உற்றிடு பன்னிரு கைத்தல நிரையும்
அருவரை யனைய வகலமு மிரண்டு
மடவன முவந்து வாழ்வுறு பாலும்
கலகலென் றிசைக்குநின் கழலுங் காட்டி
மரகதக் கலாப மயின்மிசைத் தோன்றும்

வடிவினை வாழ்த்தி மறவா துள்கி
இரவினும் பகலினு மிறைஞ்சலே னாயினும்
உன்னையே தெய்வமென் றுளத்துட் டுணிந்தனன்
அன்னது துணிந்தேற் குன்னது பாரஞ்
சினமொடு தீமையு மனமடு காமமும்
நெறியிடைப் புகாத பொருளிடைச் செலவும்
நரகிடை வீழ்த்துங் கொலைகள வாதியும்
இன்னவு மிம்மையி லகற்றி
அம்மையின் முத்தி யருளு மாறே.

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | கசு | விப்பாரே | விப்பாரே. |
| எ | உக | தொண்டுப் | தொட்டுப் |
| ரு௦ | உரு | கருப்பக்கிரக | கருப்பக்கிருக |
| ருஉ | ரு | சிறிலு | சிறிது |
| கூஎ | க | நல்லூர்க் கந்தசுவாமிகோயில். | மித்தியாவாத நிரசனம். |
| கூகூ | க | ,, | ,, |
| க௦க | க | ,, | ,, |
| க௦௩ | க | ,, | ,, |
| கஉகூ | கஅ | மீனாட்சிசுந்தரம்பிள்ளை | மீனாட்சிசுந்தரப்பிள்ளை |
| கசக | க | கச | கசக |